ஸ்ரீராமபிரான் பெறும் பேறெல்லாம் தான்பெற்றார் போலவே களித்து, அவன்பக்கல் வரும் பறுகாதலனென்பார் அப்பரதன் எனவும், "ஓவியவெழிலுடையொருவனையலதோர், ஆவியுமுடலமு மிலதென" மேவி யிருப்பவனென்பார் அவ்வண்ணலெனவும், தான்கருதிய பொருளுக்கு யாதோரிடையூறு வரினும் நீக்குமாற்றலுடையா னென்பார், ஆண்டகையெனவும், தன்கருத்துக்குப் பரதனிணங்கானென அன்னோன் கருதியது தக்கதன்றென்பார் "எண்ணருந்தகையதோர்" பொருளெனவும் கூறினார். தன்கருத்தாவது ஸ்ரீராமபிரானுக்கு முடிசூட்டக் கருதுதல்.

1394. ஆணைநின் றன்முது தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னாதலால்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூணொளிர் மார்பநீ போதி யென்றனன்.

(இ-ள்.) ஐய - ஐயனே, ஆணை-(தன்னாட்டார்மேற்செலுத்தும்) ஆணையையுடைய, நின்றன்முதுதாதை - உன்பாட்டன், நிற்காணியவிழைவது - உன்னைக்காணவிரும்புவதாகிய, ஓர் கருத்தன் - ஒருகருத்துடையான், ஆதலால் - ஆகையால், கேணியில், வளைமுரல் - குளங்களில் சங்குகளொலிக்கின்ற, கேகயம் - கேகயநாட்டில், புக - பிரவேசிக்கும்படி, பூண் ஒளிர் - ஆபரணங்களொளிர்கின்ற, மார்ப - மார்பையுடையானே, நீபோதி என்றனன் - நீபோவென்றுசொன்னான்—எ-று. (௪௭)

1395. ஏவலு மிறைஞ்சிப்போ யிராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினான்
ஆவியங் கவனல தில்லை யாதலான்
ஓவலி லுயிர்பிரிந் துடல்சென் றென்னவே.

(இ-ள்.) ஏவலும் - (சக்ரவர்த்தி) கட்டளையிடுதலும், இறைஞ்சிபோய் - வணங்கிச்சென்று, இராமன் - ஸ்ரீராமபிரானுடைய, சேவடி பூவினை - சிவந்த பாததாமரைமலர்களை, சென்னியில் புனைந்து - தலையிற் சூடி, ஆவி - தன்னுயிர், அங்கு - அவ்விடத்து, அவன் அல்லது - அவனையன்றி, இல்லை ஆதலால் - வேறில்லையாதலால், ஓவல் இல் - ஒழிதலில்லாத, உயிர்பிரிந்து - உயிரைப்பிரிந்து, உடல்சென்றென்ன - உடல்சென்றாற்போல. போயினான் - சென்றான்—எ-று. (௪௮)

1396. உளைவிரி புரவித்தே ருதாசித் தென்றெனும்
வளைமுரல் தானையான் மருங்கு போதப்போய்
இளையவன் றன்னொடு மேழு நாளிடை
நளிர்புனற் கேகய நாடு நண்ணினான்.

(இ-ள்.) உளை விரி - புறமயிர்விரிந்த, புரவி - குதிரைகட்டிய, தேர் - தேர்ப்படையையுடைய, உதாசித்து என்று என்னும் - உதாசித்தென்றுசொல்லப்படுகின்ற, வளைமுரல் - சங்குகளொலிக்கின்ற, தானையான்மருங்கு - படையையுடைய அரசனிடத்து, போத - புகுத, இளையவன் தன்னொடும் போய் - சத்ருக்னனோடுசென்று, ஏழுநாள் இடை - ஏழுநாளில், நளிர் - குளிர்ந்த, புனல் - நீர்வளமமைந்த, கேகயநாடு - கேகயதேசத்தை, நண்ணினான் - அடைந்தான்—எ-று. (௪௯)

1397. ஆனவன் போனபின் னரசர் கோமகன்
ஊனமில் போர சுய்க்கு நாளிடை

வானவர் செய்த மாதவமுண் டாகலான்
மேனனி நிகழ்ந்தன விளம்பு வாமரோ.

(இ-ள்.) ஆனவன் - அவ்வாறுசென்றவனாகியபரசன், போனபின் - போனபிறகு, அரசர்கோமகன் - சக்ரவர்த்தி, ஊனம் இல் - குற்றமில்லாத, பேர் அரசு உய்க்கும் நாளிடை - பெரிய அரசாட்சிசெலுத்துங்காலத்தில், வானவர் - (பிரமன்முதலிய) தேவர்கள், செய்த - பண்ணின, மாதவம் உண்டு ஆதலால் - பெரிய தவமுளதாகலால், மேல் - அதற்குப்பிறகு, நனிநிகழ்ந்தன - மிகுதியுமநடந்தசெய்திகளை, விளம்புவாம் - சொல்லுவோம் — எ-று. (ருய

ஊனம் இல்பேர் அரசு - வர்ணாச்சிரமதருமங்கள் செவ்விதிற்பொலியவும், வலியார் எளியாரை நலிதல்முதலிய தீமைகள் தன்னிலத்தின்றி மெலியவும் நடத்துஞ் செங்கோன்மை.

பரசுராமப்படலம் முற்றிற்று.

---

பாலகாண்டம் மூலமும் - உரையும்.

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீமத்கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

# செய்யுளகராதி.



செய்யுளகராதி முற்றும்.